30th September 1958]

SRI M. K. SOMASUNDARAM: ஸார், மந்திரி அவர்கள் இப்போது நான்கு ஜில்லாக்களுக்கு கொடுக்கப்பட்டிருப்பதாக சொன்ஞர்கள். மற்ற ஜில்லாக்களுக்கு கொடுப்பதைப்பற்றி எப்போது கவனிக்கப்படும் ?

THE HON. SRI P. KAKKAN: என்னுடைய பதிலின் இறுதியில் சொன்னபடி 1959–60 பார்ட் II ஸ்கீமில் இதைப்பற்றி கவனிக்கப் படும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI T S. RAMASWAMY PILLAI: Sir, may I know how this decision of the Government conforms to the recommendations of the Chettur Committee on Jeep Utilisation ?

THE HON. SRI P. KAKKAN: ஜில்லாக்களில் இருக்கும் வேலைகளை பொறுத்து எடுத்துக்கொள்ளப்படுகிறது.

SRI A. GOVINDASAMY: பிளாக் டெவலப்மெண்ட் ஆபீஸர் களுக்குக் கொடுப்பதைப்போல் ஒவ்வொரு மாவட்டத்திலுமுள்ள ஹரிஜன சேரிகளைப் போய்பார்ப்பதற்கு அங்குள்ள ஹரிஜன வெல்பேர் ஆபீஸர்களுக்கு ஜீப் வழங்குவதில் அரசாங்கம் கவனம் செலுத்துமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN: கனம் அங்கத்தினர் இதை சொல்லுவதற்கு முன்பே அரசாங்கம் இதில் கவனம் செலுத்திக்கொண்டு வந்திருக்கிறது.

*Misappropriation of Panchayat Funds*

*661 *Q*·—SRI M. C. MUTHUKUMARASWAMY: கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கடந்த 1952 முதல் 1957 வரை தஞ்சை ஜில்லாவில் பஞ்சாயத்து போர்டுகளில் பண மோசடி எத்தனை இடங்களில் செய்யப்பட்டது ?

(ஆ) அவைகளின் மொத்தத் தொகை எவ்வளவு ?

(இ) அவைகளில் வசூலிக்கப்பட்ட தொகை எவ்வளவு ?

(ஈ) மேற்படி தொகையை வசூலிக்க சர்க்காரால் செலவிடப்பட்ட தொகை எவ்வளவு ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (*a*), (*b*), (*c*) & (*d*) The time and labour involved in collecting the particulars may not be commensurate with the purpose that they may serve. Particulars for one year, i.e., for 1957–58 have however been collected and are furnished.

(*a*) 20.

(*b*) Rs. 22,016.

(*c*) Rs. 9,659.

(*d*) Nil.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Sir, in view of the fact that there has been wholesale misappropriation in many panchayats, will the Government consider the desirability of entrusting the audit work to the Examiner of Local Fund Accounts instead of entrusting the work to the Deputy Panchayat Officers?

[30th September 1958

THE HON. SRIMATHI **LOURDHAMMAL SIMON** : Sir, even now in the case of the Class I panchayats, their accounts are being audited by the Accountants of the local fund accounts department and only in the case of the Class II panchayats, their accounts are being checked by the Deputy Panchayat Officers.

SRI **M. C. MUTHUKUMARASWAMY** : ஸார், இந்த பஞ்சாயத்துகளில் மோசடி நடப்பதற்குக் காரணம் அதிகாரிகளின் கவனக் குறைவு தானா என்பதை அமைச்சர் அவர்கள் விளக்குவார்களா ?

THE HON. SRIMATHI **LOURDHAMMAL SIMON** : அதிகாரிகளுடைய கவனக் குறைவுதான் இதற்குக் காரணம் என்று சொல்ல முடியாது.

SRI **K. ANBAZHAGAN** : தலைவர் அவர்களே, பஞ்சாயத்து அதிகாரிகளால் ஏற்பட்ட தவறுகள் எத்தனை ? பஞ்சாயத்து தலைவர்களால் ஏற்பட்ட தவறுகள் எத்தனை ? என்பதைத் தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRIMATHI **LOURDHAMMAL SIMON** : தவறு ஏற்பட்டதாகத் தெரியவில்லை. இருந்தாலும் இதைப்பற்றி தனிக்கேள்வி கேட்டால் பதில் தெரிவிக்கலாம்.

SRI **A. VEDARATHNAM** : ஸார், இம்மாதிரியாக கணக்கை ஆடிட் செய்யும்போது ஏற்படுகின்ற மோசடிகளில் வரவேண்டிய பணத்தை வசூலிப்பதற்கு வழியில்லாமல் இருக்கிறது. ஆகவே இதில் பணப்பொறுப்பை ஏற்று நடத்துகின்றவர்களை நியமிக்கும்போது அவர்களுக்கு தகுந்த ஸெக்யூரிட்டி கட்டவேண்டும் என்று ஒரு நிபந்தனை இருந்தால் இந்த கையாடல்களை தவிர்க்க முடியும் என்பதைப்பற்றி அரசாங்கம் யோசனை செய்யுமா ?

THE HON. SRIMATHI **LOURDHAMMAL SIMON** : இவ்வாறு கையாடல் நடக்காமல் பார்த்துக்கொள்ளுவதற்குத்தான் ஆடிட் செய்யப்படுகிறது. அதில் கண்டு பிடிக்கும் பணத்தை வசூலிக்க வேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் எண்ணம். அவ்விதம் இதில் 9,659 ரூபாய் வசூலிக்கப்பட்டிருக்கிறது. மீதியுள்ள பணமும் வசூலிக்கப்படும்.

SRI **T. KARIA GOUNDER** : பஞ்சாயத்து அதிகாரிகளும், பஞ்சாயத்து தலைவர்களும்தான் இதற்கு ஜவாப்தாரி என்று அரசாங்கத்திற்கு ஏதாவது தகவல் வந்திருக்கிறதா ?

THE HON. SRIMATHI **LOURDHAMMAL SIMON** : அவ்விதம் அரசாங்கத்திற்கு தகவல் ஒன்றும் வரவில்லை.

SRI **M. K. SOMASUNDARAM** : ஸார், கையாடப்பட்ட பணம் கோர்ட் மூலம் வசூலிக்கப்பட்டதா, அல்லது டிபார்ட்மெண்ட் மூலம் வசூலிக்கப்பட்டதா ? டிபார்ட்மெண்ட் மூலம் வசூலிக்கப்பட்டதென்றால், பாக்கியிருக்கும் பணத்தை கோர்ட் மூலம் வசூலிக்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRIMATHI **LOURDHAMMAL SIMON** : டிபார்ட்மெண்ட் மூலமாக வசூலிக்கக்கூடியது, டிபார்ட்மெண்ட் மூலமாக வசூலிக்கப்பட்டது. கோர்ட் மூலமாக வசூலிக்க வேண்டியது கோர்ட் மூலமாக வசூலிக்கப்பட்டது. பாக்கித் தொகையை வசூலிக்க ஏற்பாடுகள் செய்யப்படும்.

SRI **M. R. KANDASWAMI MUDALIYAR** : பஞ்சாயத்து பிரஸிடெண்டுகளால் கையாடப்பட்ட தொகையை அவர்கள் மீது நடவடிக்கை எடுத்து வசூல் செய்யக்கூடிய முறையில் இப்போது சட்டம் இல்லை என்று சொல்கிறார்களே, அப்படியானால் நடவடிக்கை எடுக்கக் கூடிய முறையில் சட்டத்தைத் திருத்த முயற்சி செய்வார்களா ?

THE HON. SRIMATHI **LOURDHAMMAL SIMON** : இவ்விதமாக சட்டம் இல்லை என்று ஒருவரும் சொல்லவில்லை.